வியாச குலம் [சிறுகதை]

ரமேஷ் – பிரேம்

என்னுடைய அப்பா இறந்து சில மாதங்கள் கடந்த பிறகு அவருடைய அறைக்குள் சென்று சிறிது நேரம் ஓய்வெடுத்தேன்.மனம், உடல் மற்றும் அதன் அனைத்துப் புலன்களும் ஓய்வு கொள்ளும் ஒரு தருணம் போல அது இருந்தது. அறைக்குள் அப்பா வின் வாசனை இன்னும் மீந்திருப்பதாகத் தோன்றியது. அவரை எரித்த பிறகு எஞ்சிய எலும்புகளோடு சாம்பலை மிச்சமின்றி திரட்டி வேகாத பானையில் அடைத்து வங்கக்கடலில் கரைத்தாகிவிட்டது; என்றாலும் மேசைமீதிருக்கும் அவருடைய சாம்பல் கிண்ணத்தில் மிச்சமிருக்கும் சாம்பலும் சில சிகரெட் துண்டுகளும் எனக்கு அவருடைய வாசனையை தந்து கொண்டே இருக்கின்றன.

அன்று அப்பாவின் எல்லாப் பொருட்களையும் மீண்டும் ஒழுங்குபடுத்தி வைத்தபோது அவருடைய மிகப் பழைய நாட்குறிப்பேடு என் பார்வைக்குக் கிடைத் தது. எடுத்துப் புரட்டினேன். அப்பாவின் பழைய கையெழுத்து. சமீபகால எழுத்துக் களோடு பரிச்சயம் கொண்ட எனக்கு அவருடைய பழைய எழுத்துக்களைப் பார்ப்பதற்கு எனக்குப் பரிச்சயமற்ற அவருடைய பால்யகாலப் புகைப்படத்தைப் பார்ப்பது போலவே இருந்தது.

நாட்குறிப்பில் எனக்குக் கிடைத்த தகவல் சிறிது காலம் என்னை நிலைகுலையச் செய்தது, பிறகு பேரமைதியில் ஆழ்த்தியது. பிறகு எதையுமே வெளிக்காட்டிக் கொள்ளாமல் சகஜமாக என் வயதுமுதிர்ந்த அம்மாவுடன் பழக முடிந்தது. ஒருநாள் நடு இரவில் எழுந்து காரை எடுத்துக்கொண்டு சுமார் இருநூறு மைல் தொலைவிலுள்ள பொந்திஷேரிக்குச் செல்லவும் முடிந்தது.

பொந்திஷேரிக் கடற்கறை தடுப்புச்சுவர்மீது நாள் முழுவதும் உட்கார்ந்திருந்தேன். பிரெஞ்சு சிப்பாய்கள் குதிரைகளை இழுத்தபடி நடந்து கொண்டிருந்தனர். ஏன் அவர்கள் புய்தேன்' என்று குதிரை களைத் திட்டுகிறார்கள் என்ற எண்ணம் எனக்குள் ஓடியது. மது பாட்டில்களை காலி செய்து கடலில் வீசியெறிய அவை அலைகளில் குமிழியிட்டு மூழ்குவதை எத்தனை நேரம்தான் பார்த்தபடி இருப்பது.

என் ஆதிமூலத்தைத் தேடி வில்லியனூர் சென்றேன். இவ்வூர் பொந்திஷேரியிலிருந்து எட்டு மைல் தூரத்திலிருக்கும் பழமையான ஓர் ஊர். முதன் முதலாக எனது தந்தையின் பூமியில் கால் படும்போது கோகிலாம்பாள் கோயில் மணி ஒலித்து என்னை வரவேற்றதில் ஏதோ உள்ளர்த்தம் இருப்பதாகவே தோன்றியது.

***

நான் சென்றிறங்கியபோது மாலை ஒளியில் வில்லியனூரரின் புராதன கோபுரம் தகதகத்துக் கொண்டிருந்தது. காரை தேரடியில் நிறுத்திவிட்டு

தென்கோபுர வீதி எது என விசாரித்தபடி நான் செல்லவேண்டிய வீட்டை அடைந்தேன்.

வீட்டில் இருந்தவர்கள் என்னைத் திகைப்போடு பார்த்தார்கள். அறுபது ஆண்டுகளின் கதையோடு ஒருவன் தங்களிடம் வருவான் என்பதை அவர்கள் கற்பனை கூட செய்து பார்த்திருக்க மாட்டார்கள். முறுக்கு மீசையோடு தேகம் முழுவதும் சந்தனம்தடவிய மார்பளவு புகைப்படம் சுவரின் கணிசமானப் பகுதியை நிறைத்திருந்தது. இதுதானே என் அப்பா என்று கேட்டேன். எல்லோரும் திகைப்போடு ஆம் என்று தலையாட்டினர். இவர் பெயர் என்ன என்று கேட்டேன். சந்தான சாமி என்று ஒரு நடுத்தர வயசுக்காரர் சொன்னார். அவருக்கு என் முக சாயல் இருப்பதைக் கண்டேன். இது இவருடைய தொழில் பெயரா? என்றேன். அவர்கள் பதட்டப்பட்டனர். "நான் தவறாகச் சொல்லவில்லை; இவருடைய நிஜப்பெயர் என்ன?" என்று கேட்டேன். "வீராசாமி" என்று ஒரு முதியவளிடமிருந்து பதில் வந்தது. அவளுக்கும் என்னுடைய முகச்சாயல் இருந்தது. ஒவ்வொருவரையும் உற்றுப் பார்க்கப் பார்க்க எல்லோருமே எனது சாயலில் இருப்பது போலத் தோன்றியது. அந்த நடுத்தர வயதுடையவர் தன்னை பழநி என அறிமுகம் செய்து கொண்டு என்னை அழைத்துக்கொண்டு வெளியில் வந்தார்.

நானும் அவரும் தேரடிக்கு வந்தோம். எனது காரைச் சுற்றி சிறுவர்கள் நின்று வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தனர். கோயிலுக்குப் போகலாமா என்று கேட்டார். சரி என்றேன். கோகிலாம்பாள் கோயிலுக்குள் நுழைந்தோம். மூலவரை தரிசிக்காமல் பிரகாரத்தைக் கடந்து நேராக குளத்தடிக்குச் சென்றோம். பெரிய குளம். "இன்று கூட்டம் இல்லை. வெள்ளிக் கிழமையில் திருவிழா போல இருக்கும்" என சொல்லிச் சிரித்தார் பழநி, நான் மௌனமாக குளத்தில் மீன்கள் துள்ளுவதைப் பார்த்தபடி இருந்தேன்.

"நீங்கள் வீராசாமிக்கு என்ன உறவு முறை" என்று கேட்டேன்.

"அவருடைய தம்பி மகன்" என்றார்.

"அவர் எங்கே?"

“யார்?”

"வீராசாமி"

"இந்தக் குளத்தின் நடுவில் நிற்க வைத்து என் அண்ணனின் கழுத்தை அறுத்து நீரில் அமுக்கிவிட்டு எங்கோ சென்றுவிட்டார்.

சிலர் அவர் காசியில் இருப்பதாகச் சொல்கிறார்கள். இது ஐம்பது வருடத்துக் கதை. அப்பொழுதே அவருக்கு ஐம்பது வயது. இன்று அவர் உயிருடன் இருந்தால் நூறுக்கும் மேலாகி இருக்கும்" என்றார். அவர் மிகச் சாதாரணமாகச் சொன்னத் தகவல் என்னை இரண்டாகப் பிளப்பது போல இருந்தது. "இந்தக் குளமா?" எனக் கேட்டேன்.

ஆமா "ஏன்" "அது பெரிய கதை. வாருங்கள் வேறு எங்காவது போகலாம். இந்தக் குளம் என்னைத் தொந்தரவு செய்கிறது" என்றபடி எழுந்தார். கார் இருக்கும் இடத்திற்கு வந்தோம். 'வாருங்கள் பொந்திஷேரிக்குப் போய் மது அருந்தலாம்" என்றார்.

மீண்டும் என்னுடைய ஊருக்கு வந்தேன். இரண்டு நாட்களாக என்னை காணாது பதறிவிட்டதாக அம்மாவும் மனைவியும் கட்டிக் கொண்டு அழுதார்கள். அவசர வேலை பொந்திஷேரி வரைக்கும் சென்று வந்தேன் என்றேன். அம்மாவின் முகம் சிறு மாற்றமடைந்தது. நான் மாடிக்குச் சென்று என்னுடைய மகள் வயிற்றுப் பேத்தியுடன் விளையாட ஆரம்பித்துவிட்டேன்.

இப்பொழுதெல்லாம் தாத்தாவின் அறையே அப்பாவின் அறையாக மாறிவிட்டதாக என் மகள் சொல்வது சரியாகத்தான் இருக்கிறது.

சுவரில் என் அப்பா. காதோரம் நரைத்த முடி. தங்கச் சட்டமிட்ட கண்ணாடி அழகாகக் கத்தரித்த மீசை தந்தங்களின் நிறத்தில் செதுக்கிக் கோர்த்த பற்கள். இந்த முகத்தின் கம்பீரம் எனக்கு எப்படி வாய்க்கும்? என்ன இருந்தாலும் இவர்தான் என் அப்பா. என் அம்மாவின் கணவர். இலட்சியத் தம்பதிகள். தவப் புதல்வனாக நான். ஆச்சாரம் மாறாத குடும்பம். என் அழகான மனைவி. அறிவுக் கூர்மையுள்ள மகள் மற்றும் அவளது குடும்பம்.இவர் களின் கட்டமைப்பை நான் குலைத்துவிடக் கூடாது. எல்லாம் கனவு.

சில தினங்களுக்குப் பிறகு நான் என் அப்பாவின் பழைய நாட்குறிப்பை மீண்டும் ஒருமுறை வாசித்துவிட்டு எரித்துவிட்டேன். சாம்பலையும் குளியலறையில் கரைத்துவிட்டேன். மனசில் என்றுமில்லாத ஒருவித நிம்மதி.

கருத்தரங்கம் ஒன்றில் கட்டுரை வாசிக்க கல்கத்தா வரை செல்வதாகச் சொல்லிவிட்டு காசிக்கு வந்து பத்து நாட்கள் கடந்து விட்டன. நான் வந்திறங்கிய நாளுக்கு முதல் நாள் மகாத்மா காந்தி ஆற்றிவிட்டுச் சென்ற சொற்பொழிவு பத்திரிகைகளில் வெளி வந்திருந்தது. அதையே திரும்பத் திரும்பப் படித்து எல்லா வரிகளும் மனப்பாடமாகிவிட்டிருந்தன.

ஏன் இங்கு வந்தேன் என்பதை எனக்கு நானே கேட்டுக் கொண்டேயிருந்தாலும்; இங்கு வராமல் வேறு எங்கு செல்வது என பதில் கேள்வியும் கேட்டுக் கொள்கிறேன். கங்கைக் கரையோரமாக நாள் முழுவதும் நடந்து செல்வதும் இரவில் தங்கும் விடுதிக்கு வருவதுமாக இருந்தேன். விதம்விதமான சாமியார்கள். சடாமுடியர்கள். யோகத்தில் நிலைகுத்திய கண்களோடு என்னைக் கடந்துபோகும் போது என்னையறியாமலேயே அவர்களை நோக்கி எனது கைகள் குவிந்து கும்பிடுகின்றன. எங்கும் காவி நிறம். இதுதான் இந்த நகரத்தின் நிறமெனத் தோன்றியது. ஆளரவமற்ற கரையோரத்தில் அமர்ந்துகொண்டு நெடுநேரமாக தூரத்தில் இரண்டொரு படகுகள்

கரைந்து மறைவதையே கவனித்த படி இருந்த நான்; என் பக்கத்தில் வந்து அமர்ந்திருந்த ஒரு சாமியாரின் இருப்பை உணரவில்லை.

திடுக்கிட்டு என் இடதுபக்கம் திரும்பிய நான் முறுக்கு மீசையும் தோளில் வழியும் முடியும் நீண்ட தாடியுமாக காவியணிந்து மார்பெல்லாம் சந்தனம் தரித்த முதியவரைக் கண்டேன். கண்டதும் என் உடல் நடுங்கத் தொடங்கியது. அவர் என்னை ஊடுறுவிப் பார்த்தபடி என் தலையில் கை வைத்து என்னைத் தணிவு படுத்தினார்.

"இங்கு ஏன் வந்தாய்?" என்றார்.

"தெரியவில்லை: அநேகமாக உங்களைத் தேடி இங்கு வந்திருக்கலாம்."

"உன் தந்தை பெயர்?"

"சந்தானசாமி என்கிற வீராசாமி."

"உன் தந்தை பெயரைச் சொல்."

"செல்வ கணேசன்."

"தஞ்சைநாட்டுக் கடலோரமா?"

ஆம்."

"அவர் எப்படி இருக்கிறார்?"

"இறந்துவிட்டார். இரண்டு ஆண்டுகளாகிவிட்டன."

"உனக்கு என்னிடம் என்ன வேண்டும்?"

"உங்களைப் பற்றி தெரியவேண்டும்."

"எனது நூற்றியெட்டாவது வயதில் இதோ இந்த கங்கையில் இறங்கி நான் இறந்து விடுவேன். அதற்கு இன்னும் ஆறு வருடங்கள் உள்ளன. இது தவிர என்னிடம் சொல்வதற்கு எதுவுமில்லை."

"என் பிறப்பு?"

"அது சாமி கொடுத்தது."

"வீராசாமி என்பது எனக்கும் தெரியும்."

"நான் சந்தானசாமி."

நான் களுக் கென்று சிரித்துவிட்டேன். அவருடைய முகத்தில் எந்த சலனமும் இல்லை. எந்தவொரு உணர்ச்சியையும் வெளிக்காட்டாத ஒரு முகம் அதில் என்னுடைய சாயலைத் தேடினேன். அடர்ந்த சுருக்கங்கள். சுருக்கங்கள் விழுந்த பழுத்த கூழாங்கல்லைப் போல இப்படியொரு முகம்.

"அப்பா என்று உங்களை அழைக்கலாமா?"

"உன் பெயர் என்ன?"

"சந்தானசாமி"

"நிஜமாகவா?"

நான் சிரித்தபடி என்னுடைய முகவரியட்டையைக் காட்டி னேன். வாங்கிப் பார்த்தவரின் உதட்டோரம் நரைத்த முடிகளுக்கு ஆழத்தில் முறுவல் குமிழ்ந்தது. "சில மாதங்களுக்கு முன்பு பொந்திஷேரிக்குச் சென்று வில்லி யனூரிலிருக்கும் உங்களுடைய வீட்டிற்குச் சென்றேன். உங்களுடைய தம்பி மகனுடன் மது அருந்தினேன்." அவருடைய கை மணலைத் துழாவியபடி இருந்தது.

இதெல்லாம் தேவையற்றது மகனே".

"ஏன் அப்பா?"

"என் குடும்பம் அடிப்படையில் ஒரு மருத்துவக் குடும்பம். மருந்து என்பதை உடலின் எல்லா குறைகளுக்கும் கொடுப்பவனே மருத்துவன். ஒவ்வொரு குறைக்கும் ஒவ்வொரு மருத்துவன் உள்ளதுபோல நாய்க்கடி மஞ்சள் காமாலை, எலும்பு முறிவு இதற்கெல்லாம் இன்றைக்கும் உள்ளூரில் வைத்தியக் குடும்பம் ஒன்று இருந்துகொண்டு வைத்தியம் செய்வது போலத்தான் இதுவும். பச்சிலை வைத்தியம் செய்யும் குடும்பங்கள் தலைமுறை தலைமுறையாக ஒரு ரகசியத்தோடு தாம் மட்டுமே செய்து வருவதுபோலத்தான் இதுவும் ஒரு வைத்தியம். நானும் ஒரு வைத்தியன். பல தலைமுறைகளாக தெய்வத்திற்கு வேண்டி விடப்பட்ட என் குடும்பத்தில் ஒருத்தர் இந்த வைத்தியத்தைச் செய்து வந்தார். அது என்னோடு ஒரு முடிவுக்கு வந்துவிட்டது."

"நீங்கள் எத்தனை பேருக்கு வைத்தியம் செய்திருப்பீர்கள் அப்பா?"

"தலைமுறைகளின் கணக்கு எனக்குத் தெரியாது. நான் மட்டும் சுமார் இருபது பெண்களுக்குப் பேறு கொடுத்திருக்கிறேன். அதில் ஒருத்தித்தான் உன் தாய். நீ என் மருந்தில் விளைந்த வித்து."

"எனக்கு என்னைப் பற்றியும் உங்களைப் பற்றியும் விளக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். தயவு செய்து என்னை தப்பாக எடுத்துக் கொள்ளாதீர். நான் இருபதில் ஒன்றுதான் என்றாலும் உங்களுக்கு நான் ஓர் அந்நியன் அல்லன், உங்களுடைய படைப்பு தானே."

"மகனே நான் ஒரு வைத்தியன். பேறற்ற தம்பதிகளுக்கு கடவுளின் பெயரால் மருந்திட படைக்கப்பட்டது எனது வம்சாவழி, இது பன்னெடுங்காலமாக வழக்கத்தில் இருந்தது. இது பல பகுதிகளில் இன்றும் நடைமுறையில் உள்ளது. மிக ரகசியமாக, கண்ணியமாக சிவனின் மீது ஆணையாக நடந்து வருகிறது. என் வம்சாவழி வைத்தியத்தை நான் கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டேன்."

"ஏன்"

"ஏன்? தெரியவில்லை. இரண்டொரு வாக்கியத்தில் எதையும் சொல்ல முடியாது. என் குடும்பத்தில் கடவுளுக்கு நேர்ந்து ஓர் ஆண் மகவை அர்ப்பணிப்போம். அவனுக்கென்று மனைவி மக்கள் குடும்பம் கூடாது. வேறு தொடுப்புகளும் கூடாது. அவனுக்கு இருபது வயது ஆகும்போது வைத்தியத்திற்கான உடல்நிலையையும் மனநிலையையும்

அடைவான். அப்போது அதுவரை வைத்தியம் செய்து வந்தவர் பரதேசியாகி என்னைப் போல தேசாந்திரம் சென்று விடுவார். அதுபோலத்தான் எனக்கு அடுத்து, எனது குடும்பத்திற்கு நேர்ந்துவிடப்பட்ட என் தம்பியின் மூத்தமகன் சாமியாக வளர்ந்து வந்தான். அவனை குளத்தில் வைத்து மந்திரம் ஓதுவதாகக் கூறி கண்களை மூடச்செய்து சவரக் கத்தியால் கழுத்தை அறுத்து நீருக்குள் அமுக்கிக் கொன்றேன். காரணம் தெரியவில்லை. என் குல வழக்கத்தை ஒரு முடிவுக்குக் கொண்டுவர இதைச் செய்தேனா என்று தெரியவில்லை."

"ஏன் இந்த முடிவுக்கு வந்தீர்கள்?" நான் மருந்திட்ட பெண்களின் முகத்தைப் பார்த்ததே இல்லை. கருப்புத் துணியால் முகத்தை மூடி கட்டிக் கொள்வார்கள். முத்தங்களோ ஆலிங்கனமோ இல்லை. ஆடைகள் கலையாமல் அங்கங்கள் குலையாமல் நேரடியான புணர்ச்சி. என் மனமெல்லாம் சிவனைத் தவிர வேறெதுவும் இதுவரை இல்லை. அப்போதைய தருணங்களிலும் அப்படியே. ஒரு முறையிலேயே கரு கூடிவிடும். மறுமுறையும் மருந்து கொள்ள என் குலவழியில் யாரையும் நாடி இருமுறை ஒரே பெண் வந்ததில்லை. ஆனால், என்னிடம் மறுமுறை ஒருத்தி வந்தாள்; என் மனம் நடுங்கி ஈசனே என்னை ஏன் சோதிக்கிறாய் என்று மனசுக்குள் பதறினேன். என் விந்து என்பது ஈசனிடமிருந்து வருவது. அதற்கும் என் இந்த உடம்புக்கும் எந்த சம்பந்தமுமில்லை. அப்பெண்ணை நேரடியாக என் பூசை யறைக்குள் அழைத்துப் பேசினேன். தான் மருந்திட்டவளை முதன் முதலாக என் குலவழியில் நான்தான் பார்க்க நேர்ந்தது. அவளுடைய முகத்தைப் பார்த்ததும் அவளுடைய கபடம் தெரிந்தது. நான் 'ஏன் இப்படி என்றேன். அவள் தனக்குப் பிடிக்கவில்லை என்றாள். பிறகு ஏன் வந்தாய் என்றேன். தன் கணவனுக்காக என்றாள். பிறகு மளமளவென பேசினாள். தன் கணவன் மூலம் கருவுண்டாகும் போதெல்லாம் அதைத் தொடர்ந்து கலைத்து வந்திருக்கிறாள். தன் கணவனை மலடு என நம்பவைத்திருக்கிறாள். குழந்தைப் பெறுவதை வெறுத்து வந்திருக்கிறாள். என் வித்தையும் அப்படியே அழித்திருக்கிறாள்.

காரணம் கேட்டேன். குழந்தை பெறாமல் ஒரு பெண்ணோ ஒரு ஆனோ கணவன் மனைவியாக வாழக்கூடாதா? ஏன் என என்னைக் கேட்டாள். இந்தக் கேள்வி என்னை பத்தாண்டுகளுக்கும் மேலாக அலைக்கழித்தது. அந்த அலைக்கழிப்பினால் நான் அடைந்த பதில்தான்; எனது வாரிசாக என் குலவழியில் நேர்ந்து விடப்பட்ட என் தம்பியின் மகனைக் கொன்றது. இப்பொழுது ஈசனுக்கும் விடுதலை, உமைக்கும் விடுதலை.

எங்களுக்கிடையே கனத்த மௌனம் பரவியது. மாலையொளி காவிநிறத்தில் வானையும் கங்கையையும் தோய்த்துக் கொண்டிருந்தது. ஆங்கிலேய சிப்பாய்கள் குதிரைகளை இழுத்தபடி நடந்து கொண்டிருந்தனர். ஏன் அவர்கள் வோர் என்று குதிரைகளைத் திட்டுகிறார்கள் என்ற எண்ணம் எனக்குள் ஓடியது

**

என் குலவழியின் இறுதி வித்து. என் குலம் பார்த்த முதல் முகம்" என்றபடி அவர் எழுந்தார். என் கண்களில் நீர் தலும்ப அவர் கால்களில் விழுந்தேன். என்னைத் தொட்டு ஆசிர்வதித்த அவர்; என் தலை தொட்டு "இனி நீ ஒரு கணம்கூட இங்கு இருக்கக் கூடாது" என்றார்.

- நான் கத்தையாக பணத்தை எடுத்து அவரிடம் கண்ணிரோடு நீட்டினேன். அவர் முறுவலிட்டபடி தன் மடியிலிருந்து திருநீரை எடுத்து என் நெற்றியில் அணிவித்துச் சென்றார். அவர் போவதையே நெடுந்துாரம்வரைப் பார்த்திருந்தேன். காவி சூழ்ந்த வெளியில் மூழ்கிக் கரைந்து போனார். பரதேசி